

உ

திருச்சிற்றம்பலம்

# நாகப்பூர் மஹான்

# ஸ்ரீமுருகானந்தசுவாமிகள்

மேல்

---

காஞ்சிபுரம்

## ஸ்ரீ நிச்சல இராமானந்தசுவாமிகள்

முதலியவர்களால்
இயற்றப்பட்ட பதிகமுதலியவைகள்

---

காஞ்சிபுரம்

பச்சையப்பமுதலியார் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்

ம-ா-ா-ஸ்ரீ

தி. சு. வேலுசாமிப்பிள்ளையவர்களாற்

பார்வையிடப்பட்டு

---

மைசூர் ஸ்ரீ இராமாநந்தசுவாமிகளாற்

காஞ்சிபுரம்

ஸ்ரீ காஞ்சிபூஷண அச்சியந்திரசாலையிற்
பதிக்கப்பட்டுள்ளன.

---

முதல் பதிப்பு காபி 1,000
1912.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ முருகாநந்தசுவாமிகள் சரித்திரசங்கிரகம்.

ஸ்ரீமது சச்சிதானந்தபரிபூரண பரமேஸ்வரனுடைய திருவருட்கிலக்காய் யாழ்ப்பாணத்திலே அவதரித்துச் சரியையாதி நான்குசாதனமுஞ்சித்திபெற்று ஜீவன்முத்தராய்ப்பாலோன்மத்தரைப்போல்சஞ்சரித்து சி.பி. நாகப்பூர்என்னுநகரத்தில் டெண்ட்லயன்வீதிக்குச்சமீபத்தில் ஒரு புளியவிருக்ஷத்தின்கீழ் சிலநாளமர்ந்திருந்து தன்னிலைமையை வெளியிடாமல் நீறுபூத்த நெருப்புப்போலிருந்தனர். தென்னாட்டிலிருந்து அவ்வீதியில் வந்திருந்தவர்கள் அவரது மகிமையைத்தெரிந்து குருமூர்த்தியாகக்கொண்டு வழிபட்டு இஷ்டகாமியத்தைப்பெற்று இருக்க அஃதறிந்தபலரு மவ்வாறே தெரிசித்து அவர் அனுக்கிரகம் பெற்றிருந்தனர். அம்மஹானை நாகேசுரர் ஆலயத்துக்குச்சமீபத்திலெழுந்தருளச்செய்தனர். அங்கு அனேக அற்புதங்களை விளக்கி நிஷ்டையிலிருந்து பரிபூரணானந்தப் பேறுபெற்றனர். அம்மஹான்முன்னமே அன்பர்கருத்திற்கிசைந்து குறிப்பிட்டவிடத்திற்றோன்றியவில் வக்கன்றினருகில் சமாதிசெய்து ஆலயமெடுத்து நித்தியநைமித்தியம்சிறப்பாக நடத்திவருகின்றனர். அம்மஹானுடைய சிறப்பினைப்பின்விரிவாக எழுதும் புத்தகத்திற்பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்.

☞ மை. இராமாநந்தசுவாமி.

இப்புத்தகம்வேண்டுவோர் காஞ்சீபுரம் முதல் டிவிஷன் சாந்தாலீசுரன்கோவில் வேதவியாசர்மடம் ஸ்ரீமத் கதிர்வேல் சுவாமிகளிடத்திலும், ஷை தமிழ்ப் பண்டிதரிடத்திலும்,சோளிங்கபுரம் எண்ணெய்மண்டி ம—ஈ—ா—ஸ்ரீ ஆதிமூலமுதலியாரிடத்திலும், பம்பாய் கால்பாதேவிரோட்டுப் போஸ்ட் சம்பங்கியாசாரி வீட்டிலிருக்கும் ஸ்ரீமத் சங்கரகிரிசுவாமிக ளிடத்திலும் தபால் லேபில் அனுப்பி பெற்றுக்கொள்ளலாம்.



உ

திருச்சிற்றம்பலம்.

மஹான்

# ஸ்ரீமுநகாநந்தசுவாமிகள்பேரில்

# தோத்திரப்பதிகம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகமெலா நிறைவாகி யொன்ருகிப் பலவா
யோங்குமுயிர்க் குயிராகி யுவமையற வெங்கு
மிலகுபரஞ் சுடராகி யெப்பொருட்கு முன்ன
யிருந்தருளி னடம்புரியு மியற்கை வடிவாகிக்
கலகமுறு நெஞ்சருக்குக் காண்பரிதா யிலகிக்
களிந்துருகு மன்பருளங் கலந்தமுத மூட்டித்
தலைகொடுத்திங் காள்வதற்கு நாகைதனி லமர்ந்த
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (1)

மறையாகி மறைமுடிவின் வாழ்பொருளாய்ச்சமய
மதமாகி மதங்கடந்த வானமுதா யும்பர்க்
கிறையாகி யிரவிமதி சுடராகி யற்றே
யெங்குஞ்சுயஞ் சோதிபதா யிலகியிப மாகித்
துறையாகி யோகியர்க்குந் தோன்ருத தாகிச்
சுட்டகன்ற மாதவருட் சுகாதீத மாகித்
தறையாதி யறியாது நாகைதனில் வாழுந்
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (2)

சீர்பெறுமிவ் வுலகுயிர்க டேடரிய வெண்ணென்
சித்திகளு மடிபணிந்து குற்றேவல் புரிய
ஏர்பெறுநல் லருட்செல்வ ரிறைஞ்சியேத் திடவே
யெழிற்றுரியா தீதமதி லினிதிருக்கு மண்ணல்
பார்பெறுமெய் யன்பருய்ய நாகப்பூ ரோங்கிப்
பரிவுடனென் போல்வார்க்குக் கதியருள்கற்பகமே
தார்புனைந்து மடிசாத்தற் கடியேனுக் கெளிதோ
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (3)

சகலசரா சரமனைத்துந் தனக்குள்ளே நிற்கத்
தான்சகல சராசரத்துந் தாக்கறவே நின்று
மகளங்க ளாகியொன்று யாடுநட னத்தை
யறிந்திடுதி மகனேநீயதுவெனவே காட்டிப்
புகலரிய பொருண்முடிவாய்ப் போக்குவர வற்றே
பூரணசிற் சோதியதாய்ப் பொலிவுறமெய் யன்பர்
தகுதியுடன் றுதிநாகைத் தலமோங்கு மெங்க
டகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (4)

இருவினையால் வளர்ந்தோங்கி யிருக்குமொரு மலைமே
லெழிற்குன்றென் றதிலைந்து விபாக்கிரமார் பரிக்கும்
விரைவிலதை வென்றேறில் விளங்குமிரு குன்றை
வியந்ததனி னடுநரியொன் றேலமிடு மதன்மேன்
மருவுமக லாற்றினடு வுருவிலவள் சிரத்தின்
மற்கடமொன் றுலவுமதின் முடியிலொளிர் சோதி
தரிசனஞ்செய் ததுவாகித் தனித்திருப்பா யென்ற
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (5)

அன்பில்புல னடக்கமன மடங்குமதின் மேலே
யகங்கார மடங்கதின்மே லடங்குமுயிர்ப் போதம்
இன்புறநல் லருளொளியு மெழுந்தடங்கி னதன்மே
லிலகுசிவப் பிரகாச பெழுமதுவே முத்தி
அன்புடைய மகனே நீயதுவெனவே காட்டி
யருட்சோதி மயமாக்கி யாண்டருளுங் குருவே
தன்பொறுப்பா யுலகாதி தானாகி யற்றே
தழைக்குமுரு காநந்த தவராஜ மணியே. (6)

இடையிறெனடு பிங்கலையி னியலாம லிடையே
யிலகுசுழி முனைமருவிக் குண்டலியி னருளா
லடியிறெனளிர் வன்னிமதி மண்டலத்தி லேற்றி
யமிர்தமதை யுண்டுபர மானந்த முற்றே
அடைவிறச நாதவொலிக் கப்பாலுங் கடத்தி
வகண்டவடி வன்னையின்பா லடியேனைச் சேர்த்து
தடையில்கற் பூரமெனக் கரைத்தாண்டு கொண்ட
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (7)

எத்திறத்துங் காணரிதா யென்றுமொரு படித்தா
யெல்லாமா யல்லவுமா யிலகுபரம் பொருளைக்
கைத்தலத்தி னெல்லியெனக் கண்டவர்பாற் சேர்த்துக்
கலந்திடச்செய் தருளுநின்றன் கமலவடி மகிமை
மித்தையெனும் வாழ்வனைத்து மெய்யெனவுட்கொண்டு
மெலிகின்றோ ரறிவாரோ மேதையர்க ளேத்தச்
சத்திபச நாதனமாய் நாகைபதி லோங்குந்
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (8)

நில்லாத வாழ்க்கையென்று நிலையெனவே மதித்து
நின்னருளை மறந்துழலு நீசனேமே லேற்றக்
கல்லாலின் கீழமர்ந்த கண்ணுதல்போற் றோன்றி
கழல்சிரம்வைத்துற்பவந்தான் கழன்றிடவோர் மொ
சொல்லாமற் சொல்லியெனைச் சுகாதீத நிலையிற் [ழியைச்
றொழிலறச்சும் மாவிருத்திச் சுகமளித்த குருவே
சல்லாப மாகவென்று நாகைபமர்ந் தோங்குந்
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே. (9)

பாராதி யுலகனைத்தும் படர்கானற் சலம்போற்
பார்த்தகன்ற பட்டணத்தார் போன்றுகடுந்துறவா
யாராலு மறிவரிய வதீதநிலை பெற்றே
யற்புதவா நந்தநட மாடியநின் மகிமை
தேராதா ரறிவாரோ தெளிவிறெளி வாகித்
திக்கொடுதி கந்தமெல்லாந் திகழ்தேவ தருவே
தாராள மாகவரு டந்தாளு நாகைத்
தகைமுருகா நந்தனெனுந் தவராஜ மணியே (10)

வாழியரு மறைநான்கும் மறைமுடிவும் வாழி
 வாழியா றங்கமொடு மாகமங்கள் வாழி
வாழியரு ளடியாரு மந்தணரு வாழி
 வாழிகலை யறிஞர்களு மாதவரும் வாழி
வாழியரு ளுருவளித்த வருட்குருவும் வாழி
 வாழியுல காதிபரு மாநிலமும் வாழி
வாழிமுரு காநந்த சிவயோகி வாழி
 வாழிநனி நாகைவள ரன்பர்கள்வாழியவே. (11)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ

சற்குருபரப்ரஹ்மணேநமஃ.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உலகினி லுதிக்கு முயிர்களுட் சிறந்திங்
 கோங்கிடு மாந்தர்க ளென்றுங்
கலகமி லறிவாங் கற்பகத் தேனைக்
 கங்குலும் பகலற வருந்தி
நலந்தரு வீட்டை நண்ணிடச் செய்த
 நாயக மாமணிக் குன்றே
திலகமா யொளிருந் திருவருட் கனியே
 திருமுரு காநந்த மணியே. (1)

நிருமல ராகி நின்றொளிர் மணியே
நினைப்புடன் மறப்பினை நீக்குங்
கருணைமா நிதியே கரதலா மலகக்
கனியெனக் கண்டவ ருளத்திற்
றருவென வோங்குந் தன்மயச் சிவமே
தற்பரா நந்தமா தவமே
திருவருட் பெருக்காற் றிகழுஞ்செங் கனியே
திருமுரு காநந்த மணியே. (2)

சச்சிதா நந்த ஜலதிமே லூற்றுச்
சனகாதி நால்வருக் கறத்தை
நிச்சல குருவாய் நின்றருள் புரிந்து
நீங்காத சிவயோக மளித்த
உச்சித வுருவே வோங்கார வணையி
லொளிரருட் சோதியே நாளுஞ்
செத்துதிக் காமற் றிறமருட் கனியே
திருமுரு காநந்த மணியே. (3)

அஞ்சலிப் போர்கட் காராத வமுதே
யாநந்த போகமே யன்யே
சஞ்சித வினையை க்ஷணத்தினி லகற்றிச்
சதுர்மறை முடிவினி னடித்து
தஞ்சமென் றடைந்தோர் தமக்கருள் புரியுஞ்
சற்குரு ராஜனே யுன்றன்
செஞ்சரண் முடிமேற் சேர்த்தசெங் கனியே
திருமுரு காநந்த மணியே. (4)

தார்தரு நாகைத் தவத்தொளிர் சிவமே
தனிமறை யமுதினை யளிக்க
நேர்தரு ஞான பாநுவாய் நிலைத்து
நிருவிகற் பாங்கமாய் நாளும்
பேர்தரு முயிர்கள் பக்குவ நோக்கிப்
பிறங்கருள் புரிந்திட வென்றுஞ்
சீர்தரு மோன சித்தரா யுதித்த
திருமுரு காநந்த மணியே. (5)

## கொம்மிகள்.

உலகோ டுயிர்பர மானவண்டி - யென்று
மோங்காரத் தோங்குஞ்ச தாசிவண்டி - யருஞ்
சலனமு ருவண்ணங் கடந்தவண்டி - சிவ
சற்குரு நாதனைப் பாடுங்கடி. (1)

சிற்சபை யில்வாழுஞ் சிமானடி - யன்பர்
சித்தத் திருணீக்குங் கோமானடி - நாளுந்
தற்பரா நந்தச நாதனனடி - சிவ
சாமியவன் புகழ் யாடுங்கடி. (2)

நினைப்பு மறப்பற்ற நித்தனடி - சதா
நீங்கா நடுநிலை யுற்றவண்டி தன்னுட்
டளையறிந்தோர் போற்றுந் தன்யனடி - மலர்த்
தாளனவன்புகழ் பாடுங்கடி. (3)

மானுபிமான மறுத்தவண்டி மன்றில்
மாநட மாடுநிருத்தனடி சர்வந்
தானான தன்மயம் பெற்றவண்டி - சிவ
சற்குண போதனைப் பாடுங்கடி. (4)

நாகை நகர்வளர் நாதனடி பெனை
நாதாந்தத்தேற்றிய பாதனடி தொண்டர்
மோகமறுத்தாளு மூர்த்தியடி திரு
முருகானந்தன்புகழ் பாடுங்கடி. (5)

முற்றிற்று.

## லாலிகள்.

ஞான சுகாதீதா நாத னேய தீதா
மோனந் திகழ் பாதா மூர்த்தி யேப்ரக் யாதா லாலி. (1)

ஆல டியில் வாசா வாரணஞ்சொல் தேசா
சில குரு ராஜா சின்மயப்ர காசா லாலி. (2)

பாவ லர்கள் பாட பாத முடி சூட
காவ லர்நின் றூட காமா திக ளோட லாலி. (3)

நாகை வளர் சீலா நாய கனே லோலா
சோக மற வாளாய் தூய நற்கு ணாளா லாலி. (4)

கண்ம ணியா யிந்தக்காசி னியில் வந்த
தண்மு ருகாநந்த சாந்த சிவா நந்தா லாலி. (5)

முற்றிற்று

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புயனிறங்கொண்டமாலம்புயனிவர்நேடிக்காணு
வியனிறச்சோதிதன்பாவிரண்டறக்கலந்தஞானி
பயனுறுசித்தயோகிபன்னரும்நாகைமேய
நயனுறுமுருகானந்தநாதனேயருள்செய்வாயே. (1)

வாகைபார்மன்னர்முன்னோர்வழுத்திடுஞானயோகி
பாகைபாரமுதையொத்தபனிமொழிமடவார்தம்பா
லோகைபாயிருந்துவீணுயொழித்தனன்வாணுளெல்லாம்
நாகைபார்முருகானந்தநாதனேயருள்செய்வாயே. (2)

உற்றவம்புரிந்தேனல்லாலுயர்தவம்புரிந்தேனல்லேன்
பெற்றவத்துவிதத்தார்பால்பேணிமுன்சார்ந்தேனல்லேன்
கற்றவர்புகழும்நாகைக்கடிநகர்மேயசித்த
நற்றவமுருகானந்தநாதனேயருள்செய்வாயே. (3)

முற்குருகேனங்காணுமுனைவனேயனையபுன்றன்
பொற்குருமலர்த்தாளாய்நின்புகழினைக்கேட்டுமந்தோ
எற்குருகாதநெஞ்சமேன்படைத்தனனேகஞ்சன்
நற்குருமுருகானந்தநாதனேயருள்செய்வாயே. (4)

யோகப்பூர்த்தியுங்கண்ணிற்போயுள்ளகத்தந்தகாரம்
போகப்பூர்வத்தினன்போற்பொருந்திவதென்றேமின்னார்
பாகப்பூரணனேயன்னபடிவத்தோய்கடிகொள்நாஞ்சில்
நாகப்பூர்முருகானந்தநாதனேயருள்செய்வாயே. (5)

முற்றிற்று.

---

உ
சிவமயம்.
நாகப்பூர்

## மஹான்முருகாநந்தசிவயோகிகளின்

# தோத்திரப்பதிகம்.

---

காப்பு.

திருமான்முதலாமமரரெலாந்தியக்கந்திரவருளளித்த
வொருமாமுகனைத்தொலைத்தபெருமொருமாமுகனையுள்குவாம்
கருமால்கடக்குபெருவேள்விக்கருதமுனிவர்சணம்புகழும்
பெருமான்முருகாநந்தனெனும்பெரியோன்புகழைப்பேசுதற்கே

தோத்திரம்.

திருவார்கமலத்தயன்செய்புவிசெழிக்கவறமேமுதலாக (ற்
வொருநாற்பொருளுமுதவவெழிலொண்மாமுகினின்றுதவதலா
பெருமாநதிகண்மிகப்பெருகிப்பெருகட்பைங்கூழுதவுநல
மருகாதோங்குநிலமசட்குமணியாகர்களவைகராம். (1)

போகமனைத்துந்தன்னதனாற்புவியிலொன்றும்விரும்பாதோய்
ஏகமெனக்கண்டதுவொழிபவெவையும்பொய்யாமெனத்துறக்
காகமொருநோக்கிருவிழிக்குகளையாய்நின்றுநாட்டுவபோற் (து
றுகமுற்றோரகன்றோர்க்குந்தருவாய்முருகாநந்தகதி

எல்லாப்பொருளுமாயையினாலிபலக்காட்டியவைவிளங்கப்
பொல்லாங்கொன்றுமில்லாமேபோக்கச்செய்துமிட்டுமரு
ணல்லோய்நினதுதிருக்கூத்தானேவறியுமியலுடையேன்
எல்லாநலனுந்தந்தெனக்கேயிருப்பாய்முருகாநந்தவள்ளால்

திருமாமணிசேர்முடிபுனைந்ததெய்வராசுமுதற்பலவும் (லால்
பெருமானினதினருள்பெற்றோர்பெறுவாரன்றேபிறங்குத
வருமாவறுமைபிணிமூப்புவனைந்தபலவுமகற்றுமெனைப்
பெருமான்முருகாநந்தனெனும்பெரியதவத்துப்பெரியோனே.

திருமால்பிரமனரசென்போர்திகழப்பெற்றபதமுமற்றை
யருகாதேற்கும்பெரும்பதமுமையநினதுபேரருளாந்
திருவாழ்கமலத்தனிவீட்டிற்சேர்த்தியருள்கவருள்கவே
பெருமான்முருகாநந்தனெனும்பெரியதவத்துப்பெரியோனே.

சந்தமுடையநால்வேதந்தன்னொப்பானமற்றையவு
மந்தமுறச்சொல்லவைபலவுமையநினதுதிருக்கூத்தே
வந்தபொருளுமனையவற்றின்மயங்காதெடுத்துவைத்திடுவாய்
கந்தமுடையமலர்க்கழலோய்கருணைமுருகாநந்தவள்ளால். (6)

வேட்டவேட்டவரம்பெற்றார்வேட்கையுள்ளவியனுலகர்
நாட்டமுடையேன்பேரருளினலனேயருள்வாய்தவையில்லோய்
ஆட்டவாட்டவாடுவதாலகிலமென்னையதுவொழித்து
காட்டுமுருகாநந்தனெனுங்கருணைமுகிலேதனிக்கதியே. (7)

தூலமல்லேன்சூக்கமல்லேன்சொன்னகாரணத்தனையும்
போலவல்லேனயனின்றபொருளேநானென்பதின்றி
வேலவெல்லாவுலககன்றவெழிலார்சொரூபாநந்தசுக
ஞாலமதனிலளித்திடுவாய்முருகாநந்தநற்பொருளே. (8)

பொல்லாமலமேசெறிகுரம்பைப்புழுப்பையதனைப்பொன்மகளா
னில்லாதேதற்கும்பொல்லாதநெஞ்சைத்துறத்தினிலைநிறுத்திக் (ய்
கல்லாமனத்தைக்கற்பித்துக்களையாய்நின்றுகாட்டுகதி
நல்லாய்முருகானந்தனெனுநன்மாமணியேசற்குருவே. (9)

அணிமாமுதலாஞ்சித்தியெலாமடையநினதுவிளையாட்டே
பணிவாம்பத்திமுதன்மூன்றும்பண்பாய்நினதுபடிவமாந்
திணிவாஞ்சாந்திமுதனான்குந்தேவநினதுதிகழ்குணமாம்
மணியேசொரூபசுகமதுவுமறவாதளிப்பாய்முருகேசா (10)

பதிகம் முற்றிற்று.



ஓம்.

தத்சத்.

ஸ்ரீ முருகானந்தசிவயோகிகளின்

## விதேகநாட்குறிப்பு.



சீரார்கலியிலாயிரமோரைந்திலகன்றாலதனிற்
பேரார்சுபகிருதந்தமதிபிறங்குமங்நாங்கானநா
ளோரார்வாரம்பொன்மதிதானிலங்குரோணியிடபத்திற்
பேரார்முருகானந்தமகான்பெற்றான்விதே[illegible]லையே.

